## 2. இனியவை நாற்பது

### நூல் வரலாறு

ஆசிரியர் : **பூதஞ் சேந்தனர்**

தந்தையார் : **மதுரைத் தமிழாசிரியர் பூதன்**

இடம் : **பாண்டிநாடு**

காலம் : **கி. பி. 725 - 750**

இந்நூல் பதினெண் கீழ்க்கணக்கில் உள்ள நானூற்பதில் இரண்டாவதாகும். இதன் ஆசிரியர் பூதஞ்சேந்தனர் எனப் படுவர். மதுரைத் தமிழாசிரியர் மகனர் பூதஞ்சேந்தனர் எனவும் சில ஏட்டுப் பிரதிகளில் காணப்படுகின்றன. அதனல் இவர் தந்தையார் பூதன் என்பதும் அவர் தமிழாசிரியர் என் பதும் தெரியவருகிறது.

இவர் வாழ்ந்த இடம் பாண்டிநாடு என்பது ‘மதுரைத் தமிழாசிரியர் மகனர்’ எனப்படுவதால் அறிய முடிகிறது.

கடவுள் வாழ்த்துச் செய்யுளில் முதலில் சிவனைப் பாடிய தால் சைவர் என்போரும் உளர். ஆனல் சிவன், திருமால், பிரமன் முதலிய மூவரையும் பாடியிருப்பதால் சர்வ சமய நோக்குடையவர் எனலே பொருந்தும்.

கால நிலையை அறிய உதவுவது இவரது கடவுள் வாழ்த் துப் பாடலே. அதனில் பிரமனைத் துதித்திருப்பதால் கி. பி. ஏழாம் நூற்றுண்டிற்குப் பிந்தியவர் என்பதோடு, இன்ன நாற் பதின் பல கருத்துக்களை அப்படியே எடுத்தாளுவதால் இவர் அவருக்கும் பிந்தியவர் எனலாம். அதனல் அவரை அடுத்தே இவர் இதனை யாத்திருக்கவேண்டும் எனக்கொண்டு இவரது காலம் கி. பி. 725 - 750 எனப்பட்டது.

இந்நூல் கடவுள் வாழ்த்துடன் 41 செய்யுட்களைக் கொண்டது. இன்னிசை வெண்பாவினால் யாக்கப்பட்டுளது. செய்யுள் தோறும் மூன்று அல்லது நான்கு கருத்துக்களை எடுத்துக்கூறுகிறது. வாழ்க்கையில் நன்மைதரும் கருத்துக்களைத் தேர்ந்தெடுத்து 'இனிது' என்ற தலைப்பிட்டு அமைத்திருப்பதால் இஃது 'இனியவை நாற்பது' எனப்பட்டது. இதனை 'இனிது நாற்பது' 'இனியது நாற்பது' என்றும் உரைப்பர். இது பொருளொடும் எண்ணொடும் ஏற்று 'இனியவை நாற்பது' என்றாயிற்றென்க. இனிய, எளிய நடை அமைப்புடையது.

இந்நூல் இன்னாநாற்பது எழுந்த பின்னர் எழுந்தது என்பதே யாவருக்கும் ஒப்பமுடிந்த கூற்றாம். இன்னா நாற்பதின் பல கருத்துக்கள் அதனை ஒட்டியே அமைந்துள்ளன. எடுத்துக்காட்டாக: 'ஊனைத்தின்று ஊனைப் பெருக்குதல் முன்னின்னா' என்பது, 'ஊனைத்தின்று ஊனைப் பெருக்காமை முன்னினிதே' என்றும்; 'குழவிகள் உற்ற பிணியின்னா' என்பது, 'குழவி பிணியின்றி வாழ்தல் இனிதே' என்றும்; 'கல்லார் உரைக்கும் கருமப் பொருளின்னா' என்பது, 'கற்றறிந்தார் கூறும் கருமப் பொருளினிதே' என்றும்; 'பிறமனையாள் பின்னோக்கும்பேதைமையின்னா' என்பது 'பிறன்மனை பின்னோக்காப் பீடு இனிது' என்று வரும் தொடர்களின் ஒப்புமைகளால் அறிக.

இந்நூலின் கருத்துக்கள் தொடர்ந்தன அல்ல. பதினெண் கீழ்க் கணக்கு நூல்களில் கடவுள் வாழ்த்துப் பெற்ற நூல்களில் இதுவும் ஒன்று. நடைப்போக்கு, கருத்து முதலியவைகளை நோக்கின் இது வடமொழி தென்னாட்டில் வலுப்பெற்ற காலத்தில் எழுந்தது எனலாம். 'கடன் பெற்றுய்தல்', 'கடன் பெற்றுச் செய்வன செய்தல்,' 'பெண்களை விடமெனல்' முதலிய கருத்துக்களை நோக்கின் உண்மை புலனாம். இந்நூல் வீரசோழிய உரையாசிரியரால் எடுத்தாளப்பட்டுளது. தன் கால வழக்கையும், பட்டறிவையும், முன்னோர் கருத்தையும் கொண்டு இந்நூலை இயற்றிச் சிறந்துள்ளார்.

### கடவுள் வாழ்த்து

சிவனை அடைதல், திருமாலைத் தொழுதல், நான்முகனை ஏத்தல், இவை என்றும் இனிமைதரும்.

**கண்மூன் றுடையான்தாள் சேர்தல் கடிதினிதே;**
**தொல்மாண் துழாய்மாலை யானைத் தொழலினிதே;**
**முந்துறப் பேணி முகநான்(கு) உடையானைச்**
**சென்(று)அமர்ந்(து) ஏத்தல் இனிது.**

**ப-ரை:** கண் மூன்று உடையான் - மூன்று கண்களையுடைய சிவபிரானது, தாள் - பாதங்களை, சேர்தல் - அடைதல், கடிது இனிது - மிக இனிதாம்; தொல் - பழமையும், மாண் - பெருமையு முடைய, துழாய் மாலையானை - துளபமாலையை அணிந்த திருமாலை, தொழல் - வணங்குதல், இனிது - இனிதாம்; முந்துற - யாவருக்கும் முன்னதாக, பேணி - காப்பவனாகிய, நான்குமுகம் உடையானை - நான்கு முகங்களையுடையவனான பிரமனை, சென்று - அடைந்து, அமர்ந்து - விரும்பி, ஏத்தல் - துதித்தல், இனிது - இனிதாகும்.

**க-ரை:** சிவனின் பாதங்களை அடைதலும், திருமாலை வணங்குதலும், நான்முகனை நாவாரத் துதித்தலும் இனிதாகும்.

சேர்தல் - இடைவிடாது நினைத்தல். கடிது - கடி எனும் உரிச்சொல்லின் திரிபு. பேணி - இகரவிகுதிபெற்ற பெயர். ஏத்தல் - தொழிற்பெயர். சூரியன், சந்திரன், தீ எனும் முச்சுடரை முக்கண்ணாகப் பெற்றவனாதலால் சிவபிரானைக் குறித்தது; காரணப் பெயர். இடைவிடாது நினைந்து அடைதலை 'சேர்தல்' என்றார். இப்பொருளை, 'மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்-நிலமிசை நீடு வாழ்வார்'- (குறள் - 3)இல் பரிமேலழகர் காட்டும் உரையான் அறிக. தொன்று தொட்டு வருதலை - 'தொல்' என்றார். ஆக்கும் கடமைக்குக் காக்கும் கடமையும் உண்டென்பதையும், மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றுவான் எனும் பழமொழிக் கிணங்கவும், 'முற்படப் பேணி' எனக் குறிக்கின்றார். முப்பெருங்கடவுளையும் மனமொழிமெய்யால் வழிபடுதலைச் சேர்தல், ஏத்தல், தொழல் எனும் செயலாற் குறிப்பிட்டுள்ளார்.

### இரந்தும் கற்றல்

பிச்சை எடுத்தாயினும் கற்றலும், கற்றவை மறவாது உதவலும், நங்கையின் சொல்லும், மேலோரை அடைதலும் இன்பந்தரும்.

*பிச்சைபுக்(கு) ஆயினும் கற்றல் மிகஇனிதே;*
*நற்சவையில் கைக்கொடுத்தல் சாலவும் முன்னினிதே;*
*முத்(து)ஏர் முறுவலார் சொல்லினிது; ஆங்கினிதே*
*தெற்றவும் மேலாயார்ச் சேர்வு.* 1

**ப-ரை:** பிச்சை புக்கு ஆயினும் - பிச்சை எடுத்து வாழ லாயினும், கற்றல் - (கற்கவேண்டியவற்றை) கற்றல், மிக இனிது - மிகவும் இனிதாம்; நற்சவையில் - நல்லோர் கூடியுள்ள அவையில், சாலவும் - மிகவும், கைக்கொடுத்தல் - (தாம் கற்ற கல்வியானது மறவாமல்) வந்து உதவுதல், முன் இனிது – மிக இனிதாம்; முத்து ஏர் முறுவலார்-முத்தை ஒத்த அழகிய பற்களை யுடைய மகளிரது, சொல் இனிது - சொல்லானது இனிதாம்; ஆங்கு - அவ்வாறே, மேலாயார் - மேன்மையுடையாரை, சேர்வு - (துணையாக) அடைதல், தெற்றவும் - மிகவும், இனிது - இனிதாகும்.

**க-ரை:** பிச்சை எடுப்போராயினும் கற்றலில் ஊக்க மும், அவையின்கண் கருத்து மறவாது வருதலும். நங்கை யரின் நன்மொழியும், மேலோரை அடைந்து வாழ்தலும் இனிமையைத் தருவனவாம்.

சவை - சபா எனும் வடசொல் சபை ஆகி, பகர வகர ஒற்றுமை பற்றிச் சவை என்றாகியது. ஏர் - உவம உருபு. சேர்வு - தொழிற்பெயர். பொருள் இல்லை என்று கற்காமை குற்றம் என்பதைக் குறிக்கவே, 'பிச்சைபுக்காயினும் கற் றல் இனிது' என்றார். கற்றன யாவும் நினைவிற்கு வந்து நிற்றலைக் 'கைக்கொடுத்தல்' என்றார். கேட்டற்கு இனிமை உடையதை நோக்கி 'சொல்லினிது' என்றார்.

**ஒத்த இல் வாழ்க்கை**

செல்வமுடையவன் ஈதலும், ஒத்த இல் வாழ்க்கையும், துறவறம் கொள்ளலும், இன்பந் தரும்.

*உடையான் வழக்(கு)இனி(து); ஒப்ப முடிந்தால்*
*மனைவாழ்க்கை முன்இனிது; மாணுதாம் ஆயின்*
*நிலையாமை நோக்கி நெடியார் துறத்தல்*
*தலையாகத் தான்இனிது நன்கு.* 2

**ப-ரை:** உடையான் - பொருள் உடையவனது, வழக்கு - ஈகை, இனிது - இனிதாம்; ஒப்ப முடிந்தால் - (கணவன், மனைவி மாறுபாடின்றி) ஒன்றுபடலாயின், மனை வாழ்க்கை -

இல்வாழ்க்கையானது, முன் இனிது - மிகவும் இனிதாம்; மாறு தாம் ஆயின் - (அவ் இல்வாழ்க்கை) மாட்சிமைப் படாதாயின், நிலையாமை நோக்கி - நிலையற்ற இவ்வுலகவாழ்வை ஆராய்ந்து, நெடியார் - தாமதியாது, தலையாக - சிறந்ததாக, தான் துறத்தல் - (இல்வாழ்க்கைக்குரிய அகப்புறப் பற்றுக்களை) தான் நீக்குதல், நன்கு இனிது - மிகவும் இனிதாகும்.

**க-ரை:** பொருளுடையான் ஈதலும், ஒத்த கருத்தொடு வாழும் இல்வாழ்க்கையும், காலத்தில் துறவறம் கைக்கொள்ளலும் இனிதாகும்.

நெடியார் - எதிர்மறை முற்றெச்சம்; ஆகாரம் புணர்ந்து கெட்டது. துறத்தல் - தொழிற்பெயர். கருத்து வேறுபாடின்றி நடத்தலை, 'ஒப்ப முடிந்தால்' என்றார். 'நிலையாமை நோக்கி நெடியார் துறத்தலா'வது -இல்லம், இளமை, எழில், வனப்பு, புகழ், செல்வம், முதலியவையை நோக்கி என்க.

### திசை நட்பு

மறுக்காமல் ஆற்றும் இளைஞன் செயல், குற்றமின்றிக் கற்றல், சொந்த ஏர் கொண்ட உழவன் தொழில், செல் ஊரில் நண்பனைப் பெறுதல், இவை இன்பந்தரும்.

***ஏவது மாறா இளங்கிளைமை முன்இனிதே;***
***நாளும் நவைபோகான் கற்றல் மிகஇனிதே;***
***ஏருடையான் வேளாண்மை தான்இனி(து); ஆங்***
***தேரின்கோள் நட்புத் திசைக்கு. [கினிதே***

**ப-ரை:** ஏவது மாறா - (தனக்கு மூத்தோர்) கட்டளை இடுதலை மறுக்காமல் செய்யும், இளம்கிளைமை - மக்களின் செய்கை, முன் இனிது - மிக இனிதாம்; நவைபோகான் - குற்றங்களில் மனஞ் செலுத்தாதவனாய், நாளும் - ஒவ்வொரு நாளும், கற்றல் - (கற்க வேண்டியவைகளைக்) கற்றல், மிக இனிது - மிக இனிதாம்; ஏர் உடையான் - (தனக்கென) உழுமாடு முதலியவை உடையவனது, வேளாண்மை - பயிர்த் தொழில், இனிது - இனிதாம்; ஆங்கு - அவ்வாறே. தேரின் - ஆராயின், திசைக்கு - (தாம்) செல்லும் திசையில், நட்பு - நண்பரை, கோள் – பெறுதல், இனிது - இனிதாகும்.

**க-ரை:** மூத்தோருக்குக் கீழ்ப்படியும் இளைஞரும், குற்றமின்றிக் கற்றலும், ஏர் முதலியன சொந்தமுடைய உழவனும், செல்லும் இடங்களில் நட்பினைப் பெறலும், இனிமையைக் கொடுக்கும்.

ஏவது - ஏவுவது : ஏவு பகுதி, அது பகுதிப் பொருள் விகுதி. ஏவுவது, 'ஏவது' என்பது 'முற்றும் அற்றொரோ வழி' (நன்னூல்-164) எனும் வழி புணர்ந்தது. இளங்கிளை - மக்கள். திசைக்கு - திசையில் - வேற்றுமை மயக்கம். உதவிக்கும், உசாவலுக்கும், உறுதுணைக்கும் நட்புச் சிறந்தது. அதுவும் வேற்றூரில் இன்றியமையாதது என்பதை, 'கோள் நட்புத் திசைக்கு' என்றார்.

**ஆற்றங்கரை ஊர்**

அரசன் பெறும் யானைப்படை, ஊனால் உடம்பை வளர்க்கா உடல். ஆற்றங்கரை அமைந்த ஊர், மானமுடையாரை நட்டல், இவை இன்பந் தருபவை.

> ***யானை யுடைய[1] படைகாண்டல் முன்னினிதே;[2]***
> ***ஊனைத்தின்(று) ஊனைப் பெருக்காமை முன்னினிதே***
> ***கான்யாற்(று) அடைகரை ஊர்இனிது; ஆங்கினிதே***
> ***மான முடையார் தொடர்பு.[3]*** 4

**ப-ரை:** யானையுடைய படை - யானைகளையுடைய சேனையை, காண்டல் - (அரசன்) பெறுதல், முன் இனிதே - மிக இனிதாம்; ஊனைத் தின்று - (பிறிதோர் உயிரின்) தசையைத் தின்று, ஊனை பெருக்காமை - (தன்) உடம்பிலுள்ள தசையை வளர்க்காமை, முன் இனிது - மிக இனிதாம்; கான்யாற்று - காட்டாற்றின், அடைகரை - நீர் பொருந்திய கரையிடம் உள்ள, ஊர் - ஊரானது, இனிது - இனிதாம்; ஆங்கு - அவ்வாறே, மானம் உடையார் - மானமுடையாரை, தொடர்பு - நட்டல், இனிது - இனிதாகும்.

**க-ரை:** யானைப்படையையுடைய அரசனும், ஊன் தின்னாமையும், ஆற்றின்கரை அமைந்த ஊரும், மானமுடையாரை நட்டலும் இனிமையாகும்.

காண்டல் - செய்தல்; பெறுதல். யானைப்படை அரசனுக்கின்றியமையாதது என்பதை, 'படைகாண்டல்' என்றார். ஆற்றருகே ஊர் அமைதலை 'கான்யாற்று அடைகரை ஊர்' என்றார்.

**குற்றங் கூறாமை**

பிற உயிரைக் கொல்லாமை, வேண்டியோர்க்குச் சிறப்புச் செய்யாமை, நீதி தவறாது ஆளுந்தன்மை, எவருடைய குற்றத்தையும் கூறாமை, இவை இன்பந் தரும்.

---

பிற பாடம்: 1. யுடைப்படை. 2. மிக இனிதே. 3. மதிப்பு.

*கொல்லாமை முன்இனிது; கோல்கோடி மாராயம்[1]*
*செய்யாமை முன்இனிது; செங்கோலன் ஆகுதல்*
*எய்தும் திறத்தால் இனி(து);என்ப யார்மாட்டும்*
*பொல்லாங்(கு) உரையாமை நன்கு.* 5

**ப-ரை:** கொல்லாமை - (ஒருயிரைக்) கொல்லாதிருத்தல், முன் இனிது - மிகவும் இனிதாம்; கோல் - செங்கோல், கோடி - தவறி, மாராயம் - சிறப்புப்பட்டம், செய்யாமை - அளிக்காமை, முன் இனிது - மிகவும் இனிதாம்; எய்தும் திறத்தால் - கூடிய வரையில், செங்கோலன் ஆகுதல் - நீதி தவருத மன்னனுய் விளங்குதல், முன் இனிது - மிகவும் இனிதாம்; யார் மாட்டும் - எவரிடமும், பொல்லாங்கு - (பிறர்மீது காணும்) குற்றத்தை, உரையாமை - கூருமை, நன்கு - இனிது, என்ப - என்றுரைப்பர். (மேலோர்)

**க-ரை:** பிற உயிரைக் கொலை செய்யாமையும், நீதி தவறிப் பெருமைப் படுத்தாமையும், முடிந்த மட்டும் நீதியுடைமையும், பிறர் குற்றம் கூருப் பெருந்தன்மையும் இன்பம் பயக்கும்.

மாராயம் - அரசனுல் அளிக்கும் சிறப்புப்பட்டம். எட்டி, காவிதி போன்றன. கோடி - கோடு + இ. கோல் - ஆகுபெயர். அரசன் ஒருவன் மாட்டு அன்புகொண்டு சிறப்புச் செய்தலும், மற்ருேரை வாளா விடுத்தலும் நீதி அன்மையின் 'கோல்கோடி மாராயம் செய்யாமை' என்ருர். எல்லோர்க்கும் நல்லனுதல் ஆகாத செயல் ஆதலின், முடிந்தமட்டும் ஆற்று என்பதை வலியுறுத்த 'எய்தும் திறத்தால் செங்கோலன் ஆதல் இனிது' என்ருர்.

**முடிந்த மட்டும் அறம் செய்**

முடிந்தவரை அறம் செய்தல், நல்லோர் நயமொழி கூறல், நாணமுடையோரைக் கொள்ளல், இவை இன்பந் தரும்.

*ஆற்றும் துணையால் அறம்செய்கை முன்இனிதே;*
*பாற்பட்டார் கூறும் பயமொழி மாண்(பு)இனிதே:*
*வாய்ப்(பு)உடையர் ஆகி வலவைகள் அல்லாரைக்*
*காப்[பு]அடையக் கோடல் இனிது.* 6

---

பிற பாடம்: 1. மாராயன்.

**ப-ரை:** ஆற்றும் துணையால் - கூடிய மட்டும், அறம் செய்கை - ஒழுக்கவழி நடத்தல், முன் இனிது - மிக இனிதாம், பால் பட்டார் - நல் வழியில் நின்றோர், கூறும் - சொல்லும், பயம் மொழி - பயன் தரும் சொல்லின். மாண்பு - மாட்சிமை, இனிது - இனிதாம்; வாய்ப்பு உடையராகி - (கல்வி, கேள்வி, செல்வம் முதலிய நலம் யாவும்) வாய்க்கப் பெற்றவராகி, வலவைகள் அல்லாரை - நாணிலிகள் அல்லாத (மானமுடைய) வரை, காப்பு - காப்பாக, கோடல் - கொள்ளுதல், இனிது - இனிதாகும்.

**க-ரை:** ஒழுககத்தில் தவறுது நடக்க முற்படலும், நல்லோர் நயமொழியும், மானமுடையவரை ஏற்றுக்கொள் ளலும் இனிதாம்.

அறம் - ஒழுக்கம். பாற்பட்டார் - நன்நெறி நிற்போர். வலவைகள் - நாணமில்லாதவர். கோடல் - கொள் + தல் - தொழிற்பெயர். நல்லன நினைத்தல், சொல்லல், செய்தல் முதலியவற்றை, 'அறம் செய்கை' என்றார். பகைவர், நொது மலர், நண்பர் யாவராயினும் பயன் தரும் மொழிகளைக் கூற லின், 'பாற்பட்டார் கூறும் பயமொழி' என்றார். கல்வி, கேள்வி, செல்வம், ஆண்மை முதலியன விருந்தும் நாணம் இல்லாதவன், தன்னை அடைந்தோரைக் கைவிடுவன். ஆத லின் யாவும் நிறைந்தோரை நமக்குக் காப்பாகப் பெறுதல் இனிதென்பதைக் குறிக்க, 'வாய்ப்புடையராகி வலவைகள் அல்லாரைக் காப்படையக் கோடல் இனிது' என்றார். வலவைகள் அல்லாதார் - நாணமுடையோர்.

தவறுடைத் தந்தை

மறை மறவா அந்தணர் செயல், ஒற்றுமையுடைய படையின் தொழில், தவறுடைத் தந்தை சொல் தள்ளல், இவை இன்பந்தரும்.

***அந்தணர் ஒத்துடைமை ஆற்ற மிகஇனிதே;***
***பந்தம் உடையான் படைஆண்மை முன்இனிதே;***
***தந்தையே ஆயினும் தான்அடங்கான் ஆகுமேல்***
***கொண்(டு)அடையான் ஆகல் இனிது.*** 7

**பரை:** அந்தணர் - அந்தணர், ஒத்து உடைமை - மறையை, ஆற்ற மிக இனிது - (மறவாது) ஆற்றல் மிக இனி தாம்; பந்தம் உடையான் - கட்டுப்பாடுடையான், படை ஆண்மை - சேனையை ஆளுந்தன்மை, முன் இனிது - மிக இனி

தாம்; தந்தையே ஆயினும் - (தன்னைப் பெற்ற) தந்தையே ஆனாலும், தான் அடங்கான் ஆகுமேல் - தான் (தீ நெறியினால்) அடங்காதவனாய் இருப்பானேல், கொண்டு - அவன் சொற் கேட்டு, அடையான் ஆதல் - நடவானாய் இருத்தல், இனிது - இனிதாகும்.

**க-ரை:** மறை மறவா அந்தணர் செயலும்; ஒற்றுமை யுடையான் படை வலியையும், தீயவழித் தந்தைசொல்லைத் தனயன் ஒதுக்கலும் இனிமை தரும்.

அத்தணர் - அழகிய தண்மையுடையார். ஒத்து-மறை. பந்தம் - கட்டுப்பாடு; ஒற்றுமை. ஏல் - எனின் என்பதன் மரூஉ. கட்டுப்பாடுடையான் ஆளும் படைத்தன்மை யாவரும் போற்றும் இயல்பினன் என்பதை, 'பந்தம் உடையான் படை ஆண்மை' என்றார். தந்தையாய் இருப்பினும் தான் மனமொழி மெய்வழி அடங்கானாயின் அவனிடம் நீதி உரை கேட்டல் அழிவைத் தருமாதலின், 'தந்தையே ஆயினும் தான் அடங்கான் ஆகுமேல் கொண்டடையான் ஆகல் இனிது' என்று உரைத்தார்.

## யானைப் போர்

வலியுடைக் குதிரையில் செல்லல், அரசன் யானைப்போர் காணல், அன்புடையார் அருமொழி கேட்டல், இவை இன்பந் தருவன.

★ ***ஊரும் கலிமா உரனுடைமை முன்இனிதே;***
***தார்புனை மன்னர் தமக்(கு)உற்ற வெஞ்சமத்துக்***
***கார்வரை யானைக் கதங்காண்டல் முன்இனிதே;***
***ஆர்வம் உடையார்[1] ஆற்றவும் நல்லவை***
***பேதுறார்[2] கேட்டல் இனிது.*** 8

**ப-ரை:** ஊரும் - ஏறிச் செலுத்தும், கலிமா - எழுச்சி மிக்க குதிரை, உரன் உடைமை - வலியுடையதாயிருத்தல், முன் இனிது - மிக இனிதாம்; தார் புனை மன்னர் தமக்கு - மாலை அணிந்த மன்னர்களுக்கு, உற்ற - வாய்த்த, வெம்சமத்து - போர்க்களத்தில், கார்வரை யானை - கரிய மலை போன்ற யானைகள், கதம் காண்டல் - கோபித்து ஆற்றும் போரைப் பார்த்தல், முன் இனிது - மிக இனிதாம்; ஆர்வம் உடையார் - அன்புடையவர், ஆற்றவும் நல்லவை - (பெரியோர்) போற்றும்

பிற பாடம்: 1. உடையவர். 2. பேதுற்றார். ★ இப்பாடல் பஃறொடை வெண்பா.

நல்ல கேள்விகளை, பேது உறுர் - மயக்கமடையாதவர்களாய், கேட்டல் - கேட்பது, இனிது - இனிதாகும்.

**க-ரை:** வலியுடைக் குதிரையின்மேல் செல்லலும், அரசன் யானைப்போர் காணலும், அன்புடையார் சொல்லை அமைவுடன் கேட்டலும் இனிதாம்.

கலி - எழுச்சி. க்தம் - கோபம். பேது - அறியாமை. யானைப் போர் காண்டல் அரசர்க்கியல்பு என்பதை, 'கார் வரை யானைப்போர் காண்டல்' என்றார். ஆர்வம் உடையார் தாம் கேட்ட பொருளை, உட்கொள்ளல், உள்ளத்தமைத் தல், பின் சிந்தித்தல், தெளிதல், நிற்றல் முதலியவைகளை ஆற்றல்பற்றி, 'ஆர்வம் உடையார் ஆற்றவும் நல்லவை பேதுறார் கேட்டல் இனிது' என்றார்.

*முழு நிலவு*

தம்மைச் சேர்ந்தோர் சுகமுறல், முழுநிலாக் காணல், பிறர்க்கு இரங்கும் அன்புடையர் ஆதல், இவை இன்பம் தருவன.

***தங்கண் அமர்(பு)உடையார் தாம்வாழ்தல் முன் இனிதே;***
***அங்கண் விசும்பின் அகல்நிலாக் காண்(பு)இனிதே;***
***பங்கம்இல் செய்கையர் ஆகிப் பரிந்(து)யார்க்கும்***
***அன்புடையர் ஆதல் இனிது.*** 9

**ப-ரை:** தம்கண் - தம்மிடத்தே, அமர்பு உடையார் - விருப்பம் உடையவர், வாழ்தல் - (நல்நிலையில்) வாழ்வது, இனிது - இனிதாம்; அம் கண் விசும்பின் - பரந்த வானிடத்து, அகல் நிலா - விரிந்த நிலாவை, காண்பு - காணுதல், இனிது - இனிதாம்; பங்கம் இல் - குற்றம் இல்லாத, செய்கையர் ஆகி - ஒழுக்கத்தையுடையராகி, யார்க்கும் - யாவருக்கும், பரிந்து - இரங்கி, அன்புடையர் ஆதல் - அன்புடையராக இருத்தல், இனிது - இனிதாகும்.

**க-ரை:** நம்மாட்டு விருப்புடையார் நலமுடன் வாழ்த லும், முழுநிலாவைக் காணுதலும், குற்றமிலாதவராகிப் பிறர்க்குதவும் பெற்றியாளராய் இருத்தலும் இனிதாம்.

அமர்பு - விருப்பம். தாம் வாழ்தல் - தாம் அசை. முழு நிலவு கண்ணிற்கழகு பற்றி, 'அகனிலாக் காண் பினிது' என்றார். 'அங்கண் விசும்பின் அகனிலா பாரிக்

கும்' என்று (நாலடியார் - 151) முழுநிலவைக் குறிப்பதை அறிக. தம் பெருமைக்குத் தம்மைச் சூழ்ந்தோரும் நலமுறல் வேண்டும் என்பதை, 'தங்கண் அமர்புடையார் தாம் வாழ்தல் முன் இனிது' என்றார்.

### கடன் பெரு வாழ்வு

கடன் கொள்ளாது வாழ்தல், கற்பிலாப் பெண்ணைக் கைவிடல், மாண்பிலாரை ஒதுக்கல், இவை இன்பந் தருவன.

***கடம்உண்டு வாழாமை காண்டல் இனிதே;***
***நிறைமாண்(பு)இல் பெண்டிரை நீக்கல் இனிதே;***
***மனமாண்(பு)இ லாதவரை அஞ்சி அகறல்***
***எனைமாண்பும் தான்இனிது நன்கு.*** **10**

**ப-ரை:** கடம் உண்டு-கடனைப் பெற்று உண்டு, வாழாமை-வாழாதிருத்தலை, காண்டல் - காணுதல், இனிது - இனிதாம்; நிறை - கற்பாகிய, மாண்பு இல் - மாட்சிமை இல்லாத, பெண்டிரை - மனைவியரை, நீக்கல் - நீக்கிவாழ்தல், இனிது - இனிதாம்; மனம் மாண்பு இலாதவரை - மனத்தின்கண் மாட்சிமை இல்லாதவரை, அஞ்சி அகறல் - அஞ்சி நீங்குதல், எனை மாண்பும் - எல்லா மாட்சிகளிலும், நன்கு இனிது - மிக இனிதாகும்.

**க-ரை:** கடனின்றி வாழ்வோரைக் காணலும், கற்பிலாப் பெண்டிரை நீக்கி வாழ்தலும், வஞ்சகரை நீங்கி வாழ்தலும் இனிமைதரும்.

கடம் - கடன்; போலி. அகறல் - தொழிற் பெயர். கற்பழிந்த மனைவியோடு கலந்துறைதல் இழிவு பயக்கும். ஆதலின் நீக்கல் நன்று என்பதை 'நிறை மாண்பில் பெண்டிரை நீக்கல்' என்றார். துட்டரைக் கண்டால் தூரவிலகு எனும் பழமொழிக் கருத்தை, 'மனமாண்பு இலாதவரை அஞ்சி அகறல் எனை மாண்பும் தான் இனிது நன்கு' என்பது வலியுறுத்துகிறது. தான் இனிது - தான் அசை.

### உலோபியால் உண்ணுமை

ஊர் ஊராய்க் குடிப்பெயராமை, அறிவுடையோரிடம் வீண்வாதம் செய்யாமை, உலோபியிடம் உண்ணுமை, இவை இன்பந் தருவன.

*அதர்சென்று வாழாமை ஆற்ற இனிதே;*
*குதர்சென்று கொள்ளாத கூர்மை இனிதே;*
*உயிர்சென்று தான்படினும் உண்ணார்கைத்(து) உண்*
*பெருமைபோல் பீ(டு)உடைய(து) இல்.* [ணப்

**ப-ரை:** அதர் சென்று - வழியேபோய், வாழாமை (ஊர் ஊராய்) வாழாதிருத்தல், ஆற்ற இனிது - மிக இனிதாம்; குதர் சென்று - தப்புவழியிற் சென்று, கொள்ளாத - (நூற்குப் பொருள்) கொள்ளாத, கூர்மை - மதி நுட்பம், இனிது - இனிதாம்; உயிர் சென்று படினும் - உயிர் போனாலும், உண்ணார் கைத்து - (தான்) உண்ணாத உலோபியின் கையில் உள்ள உணவை, உண்ணு - உண்ணாத, பெருமை போல் - பெருமையைப்போல, பீடு உடையது இல் - பெருமையுடையது (வேறொன்றும்) இல்லையாம்.

**க-ரை:** ஊர் ஊராய் சென்று வாழாமை, தபபுவழியில் நூற்பொருளைக் கூருமை, உலோபியின் பொருள் பெற்று உய்யாமை, இவை இன்பந் தருவனவாம்.

அதர் - வழி. குதர் - குதர்க்கம்; விதண்டாவாதம். தான் - அசை. நிலையற்று ஊர் ஊராய்த் திரிதல் இன்பம் பயவாதாகையால், 'அதர்சென்று வாழாமை ஆற்ற இனிது' என்றார். ஆய்வு தேவை. ஆனால் முன்னோர் வழிவிட்டு முரண்பட்ட பொருள் கூறல் அறிவுக்கழகல்ல, ஆதலின் 'குதர்சென்று கொள்ளாத கூர்மை' என்றார். நன் மனமும், நல்வழியும் பெருத உணவு நஞ்சினும் கொடிது என்பதை 'உண்ணார்கைத்து உண்ணுப் பெருமை' என்றார். இதனை 'ஊன்கெடினும் உண்ணார் கைத் துண்ணற்க' (நாலடியார் - 80) என்ற கருத்தால் அறிக.

### நோயற்ற குழந்தை

நோயற்ற குழந்தை, குறைவின்றிக் கூறும் கல்வி, நல்லோர்பால் செல்வம், இவை இன்பந் தருவன.

*குழவி பிணியின்றி வாழ்தல் இனிதே;*
*கழறும் அவையஞ்சான் கல்வி இனிதே;*
*மயரிகள் அல்லராய் மாண்(பு)உடையார்ச் சேரும்*
*திருவுந்தீர்(வு) இன்றேல் இனிது.* 12

**ப-ரை;** குழவி - குழந்தைகள், பிணி இன்றி - நோய் இல்லாது, வாழ்தல் - வாழ்வது, இனிது - இனிதாம்; கழறும் -

(சபைக்கேற்ப) சொல்லுகின்ற, அவை அஞ்சான் - சபைக்கு அஞ்சாதவனுடைய, கல்வி - கல்வியானது, இனிது - இனிதாம்; மயரிகள் அல்லராய் - மயக்கமுடையவர் அல்லாதவராய், மாண்பு உடையார் - மாட்சிமைப்பட்டவரை, சேரும் - அடையும், திருவும் - செல்வமும், தீர்வு இன்றேல் - நீங்காதாயின், இனிது - இனிதாகும்.

**க-ரை:** நோயற்ற குழந்தையும், அவை அஞ்சான் கூறும் கல்வியும், ஐயப்படாதாரிடம் அணைந்த செல்வமும் இன்பம் பயக்கும்.

மயரிகள் - ஐயப்பாடுடையவர்கள். திரு - செல்வம்; பல பொருள் ஒரு சொல். 'திருவும்' - 'உம்' எச்ச உம்மை. மயரிகள் அல்லராய் - தெளிந்த அறிவினையுடையராய். 'ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம் - பேரறி வாளன் திரு' (குறள் - 215) என்பதற்கேற்ப, 'மாண்புடையார்ச் சேரும் திருவும் தீர்வின்றேல் இனிது' என்றார். இளமையில் குழந்தைகளுக்கு ஏற்படும் கிரகதோஷம், பட்சிதோஷம், பிறவிப் பிணி, முதலியவற்றைக் 'குழவி பிணி' என்றார்.

**மானங்கெட்டு வாழாமை**

மானமிழந்து வாழாமை, இருப்பிடத்து வாழ்தல், நல்லோர் பெற்ற கல்வி, இவை இன்பந் தருவன.

***மானம் அழிந்தபின் வாழாமை முன் இனிதே;***
***தானம் அழியாமைத் தானடங்கி வாழ்(வு)இனிதே;***
***ஊனம்ஒன்(று) இன்றி உயர்ந்த பொருளுடைமை***
***மானிடவர்க்(கு) எல்லாம் இனிது.*** ***13***

**ப-ரை:** மானம் அழிந்தபின் - பெருமை கெட்ட பின்பு, வாழாமை - (உயிர்) வாழாதிருத்தல், முன் இனிது - மிக இனிதாம்; தானம் - (தான் இருந்து வாழும்) இருப்பிடம், அழியாமை - அழியாதவாறு, தான் அடங்கிவாழ்வு - தான் அடங்கி வாழ்தல், இனிது - இனிதாம்; ஊனம் ஒன்று இன்றி - குறைவு ஒன்றும் இல்லாது, உயர்ந்த பொருள் உடைமை - சிறந்த பொருள் உடையராதல், மானிடவர்க்கு எல்லாம் - எல்லா மக்கட்கும், இனிது - இனிதாகும்.

**க-ரை:** மானம் அழிந்து உயிர் வாழாதிருத்தலும், இருப்பிடம் அழியாது அடக்கத்தோடு வாழ்தலும், நல்வழியிற்பெற்ற பொருளை எல்லோர்க்கும் உதவுதலும் இனிமையாம்.

தானம் - இருப்பிடம். தன் நிலையினின்றும் தாழ்தலை, 'மானம் அழிந்தபின்' என்றார். இதனை, மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார் - உயிர் நீப்பர் மானம் வரின்'- (குறள் - 969)என்பதால் அறிக. உயர்ந்த பொருளுடைமை - கல்வி என்பதை, 'கேடில் விழுச் செல்வம் கல்வி ஒருவர்க்கு - மாட ல்ல மற்றை யவை'- (குறள் - 400) எனும் கருத்தை நோக்குக.

**மழலை மொழி**

தளர்நடைக் குழவி காணல், மழலை மொழி கேட்டல், வினைவழிக்கு அஞ்சாதிருத்தல், இவை இன்பந் தருவன.

*குழவி தளர்நடை காண்டல் இனிதே;*
*மழலையைக் [1] கேட்டல் அமிழ்தின் இனிதே;*
*வினையுடையான் வந்(து)அடைந்து வெய்(து)உறும்*
*மனனஞ்சான் ஆகல் இனிது. [போழ்து*

**ப-ரை:** குழவி - குழந்தைகளது, தளர் நடை - தளர்ந்த நடையை, காண்டல் - காணுதல், இனிது - இனிதாம்; மழலையை - குழந்தைகளது மழலைச் சொற்களை, கேட்டல் - கேட்பது, அமிழ்துஇன் - அமுதத்தைக் காட்டினும், இனிது - இனிதாம்; வினையுடையான் - தீவினையுடையான், வந்து அடைந்து – (அத் தீவினை) தன்னை வந்து சேர்ந்து, வெய்து உறும்போழ்து - துன்பம் அடையும் காலத்தும், மனன் அஞ்சான் ஆகல் - மனம் அஞ்சாது நிற்றல், இனிது - இனிதாகும்.

**க-ரை:** குழந்தைகளது தளர்ந்த நடையைக் காண்டல், குழந்தையின் மழலை மொழி கேட்டல், தீவினை வந்தபோதும் மனம் அஞ்சாது ஆற்றல் இனிமையாம்.

'குழவி தளர் நடை.' என்பது 'குறுகுறு நடந்து சிறுகை நீட்டி' (புறம் - 188) என்பதால் அறிக. மழலை மொழியின் மாண்பை, 'குழலினிது யாழினிது என்பதம் மக்கள் - மழலைச்சொல் கேளா தவர்'- (குறள் - 66) எனும் கருத்தை நோக்குக. தீவினைப் பயன் வந்தே தீரும், அதற்காக அஞ்சுதல் அழகல்ல என்பதை, 'வினையுடையான் ... ... மனன் அஞ்சான்' என்றார். வள்ளுவரும், 'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று - சூழினும் தான்முந் துறும்'- (குறள் - 380)இல் கூறியுள்ளார்.

---

பிற பாடம்: 1. அவர் மழலை.

**மழை காணும் பயிர்**

பிறர்மனை விரும்பாப் பெருமை, மழை காணும் பயிர், அரசன் கேட்கும் யானை முழக்கம், இவை இன்பந் தருவன.

*பிறன்மனை பின்னோக்காப் பீ(டு)இனி(து); ஆற்ற*
*வறனுழக்கும் பைங்கூழ்க்கு வான்சோர்(வு) இனிதே;*
*மறமன்னர் தங்கடையுள் மாமலைபோல் யானை*
*மதமுழக்கம் கேட்டல் இனிது.* **15**

**ப-ரை:** பிறன் மனை - பிறனுடைய மனைவியை, பின் நோக்கா - திருப்பிப் பாராத, பீடு - பெருமை, இனிது - இனிதாம்; வறன் உழக்கும் - நீர் இன்மையால் வருந்தும், பைங் கூழ்க்கு - பசிய பயிர்க்கு, வான் சோர்வு - மழை பொழிதல், இனிது - இனிதாம்; மறம் மன்னர் - வீரத்தையுடைய அரசர், கடையுள் - (அரண்மனை) கடை வாயிலின்கண், மாமலை போல் - பெரியமலை போன்ற, யானை – யானைகளது, மதமுழக் கம் - மதத்தாற் செய்யும் பிளிற்றொலியை, கேட்டல் - கேட் பது, இனிது - இனிதாகும்.

**க-ரை:** பிறன் மனைவியை ஆசைகொண்டு தொடரா மையும், பயிர்க்கு மழை பெய்தலும், யானைகள் செய் யொலி கேட்கும் அரசனும் இன்பம் பெறும்.

வான் - மழை; ஆகு பெயர். பின் நோக்கல் - திருப்பிப் பார்த்த வண்ணம் செல்லல்; தொடர்தலுமாம். 'பிறன் மனை தனைநோக்காச் செயலை' வள்ளுவர், 'பிறன்மனை நோக்காத பேராண்மை'- (குறள் - 148) எனக்குறித்தார். யானைகள் அரசரிடம் இருத்தலை வலியுறுத்த, 'யானை முழக்கம் கேட் டல் இனிது' என்றார். தம்கடையுள் - தம் அசை.

**இரவாது ஈதல்**

கற்றார் போற்ற கல்வியுரைத்தல், மேலோரை அடைதல், இரவாது ஈதல், இவை இன்பந்தருவன.

*கற்றார்முன் கல்வி உரைத்தல் மிகஇனிதே;*
*மிக்காரைச் சேர்தல் மிகமாண முன்இனிதே;*
*எட்டுணை யானும் இரவாது தான்ஈதல்*
*எத்துணையும் ஆற்றல் இனிது.* **16**

**ப-ரை:** கற்றார்முன் - கற்றவர்களுக்கு முன்பு, கல்வி - தாம்கற்ற கல்வியை, உரைத்தல் - சொல்லுதல், மிக இனிதே -

மிகவும் இனிதாம்; மிக்காரை - (அறிவில்) மேம்பட்டவரை, சேர்தல் - அடைதல், மிக மாண - சிறந்த மாட்சிமைபெற, முன் இனிது - மிகவும் இனிதாம்; எள் துணையும் - எள்ளளவாயினும், இரவாது - (பிறரிடம் தான்) யாசியாது, தான் ஈதல் - கொடுத்தல், எ துணையும் - எவ்வளவும், ஆற்றல் - போற்றல், இனிது - இனிதாகும்.

**க-ரை:** கற்ற கல்வியைக் கற்றோர்முன் கூறலும். அறிஞரை அடைதலும், தான் இரவாது ஈதலும் இனிதாகும்.

எட்டுணை - எள் துணை : எள் அளவு, 'மிக்காரைச் சேர்தல் மிகமாண முன் இனிதே' என்பது 'அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப் - பேணித் தமராக் கொளல்' (குறள் - 443) எனும் கருத்தால் அறிக.

**நல்ல செயல்**

நண்பர்க்கு நல்லன புரிதல், பகைவரைச் சேராரைப் பண்பாக்கிக் கொள்ளல், குறைவிலா அரணை அடைதல், இவை இன்பந் தருவன.

***நட்டார்க்கு நல்ல செயல்இனி(து); எத்துணையும்***
***ஒட்டாரை ஒட்டிக் கொளல்அதனின் முன்இனிதே;***
***பற்பல தானியத்(து) ஆகிப் பலருடையும்***
***மெய்த்துணையும் சேரல் இனிது.*** 17

**ப-ரை:** நட்டார்க்கு - (தம்மிடம்) நட்புடையார்க்கு, நல்ல செயல் - இனியவற்றைச் செய்தல், இனிது – இனிதாம்; எ துணையும் - எவ்வளவும், ஒட்டாரை - (தன் பகைவரோடு) சேராதவரை. ஒட்டிக்கொளல் - நட்பாக்கிக் கொள்ளுதல், அதனின் - , முன் இனிது - மிகவும் இனிதாம்; பற்பல தானியத்து ஆகி - பற்பல உணவுப் பொருள்கள் உடையதாயும், பலர் உடையும் - பலர் காண்பதற்கு ஏற்றதாகவும், மெய்த் துணையும் - மெய்க்காப்பு வீரரோடும், சேரல் - (அரணை) அடைதல். இனிது - இனிதாகும்.

**க-ரை:** நண்பர்க்கு நல்லன ஆற்றலும், பகைவரைச் சிறிதும் சேராதாரைச் சேர்த்தலும், உணவுப் பொருளும் பலர் போற்றலும் மறவீரரும் உடைய அரணை அடைதலும் இன்பமாகும்.

தானியம் - உணவுப் பொருள்; நவதானியம் எனினும் பொருந்தும். 'நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்தே - ஒட்

டாரை ஒட்டிக் கொளல்'- (குறள் - 697) எனும் கருத் தமைந்துள்ளது. 'பற்பல தானியத்து ஆகி பலருடையும் மெய்த்துணையும் சேரல் இனிது' என்பது, 'எல்லாப் பொருளும் உடைத்தாய் இடத்ததுவு - நல்லாள் உடையது அரண்'- (குறள் - 746)ஐ வலியுறுத்தி நிற்கிறது. 'பலருடையும்' என்பது 'உயர் வகலம் திண்மை அருமை'- (குறள் - 743) எனும் குறட் பொருளை ஏற்றதை அறிக.

### பெற்றோரை வணங்கல்

அறிவுடையோர் அமைந்த ஊர், விதி தவறு தவசி, பெற்றோர் தாள் வணங்கும் தனயன், இவை இன்பந் தருவன.

*மன்றின் முதுமக்கள் வாழும் பதிஇனிதே;*
*தந்திரத்தின் வாழும் தவசிகள் மாண்(பு)இனிதே;*
*எஞ்சா விழுச்சீர் இருமுது மக்களைக்*
*கண்(டு)எழுதல் காலை இனிது.* 18

**ப-ரை:** மன்றின் – அம்பலத்தினிடத்து, முதுமக்கள் - அறிவுடையோர், வாழும் பதி - வாழ்கின்ற ஊர், இனிது - இனிதாம்; தந்திரத்தின் - நூலின் விதிப்படி, வாழும் தவசிகள் - வாழ்கின்ற தவத்தோரது, மாண்பு - மாட்சிமை, இனிது - இனி தாம்; எஞ்சா - குறையாத, விழுச்சீர் - சிறப்பினையுடைய, இருமுது மக்களை - தாய் தந்தையரை, காலை - காலைவேளையில், கண்டு - (சென்று) பார்த்து, எழுதல் - (வணங்கி) எழுதல், இனிது - இனிதாகும்.

**க-ரை:** அறிவுடையோர் வாழ்கின்ற ஊர், நூல்முறை ஒழுகும் தவத்தோர், தாய்தந்தையரைத் தொழுது எழும் தனயன், இவர் இன்பம் பெறுவர்.

மன்றம் - ஊர்ப் பொதுவிடம். தந்திரம் - நூல்.

### தக்கோர்க் கீதல்

நண்பரைப் புறங்கூறாமை, நூல்முறை நடத்தல், பெற்ற பொருளைத் தக்கோர்க்கீதல், இவை இன்பந் தருவன.

*நட்டார்ப் புறங்கூறான் வாழ்தல் நனிஇனிதே;*
*பட்டாங்கு பேணிப் பணிந்[து]ஒழுகல் முன்இனிதே;*
*முட்டில் பெரும்பொருள் ஆக்கியக்கால் மற்[று]அது*
*தக்குழி ஈதல் இனிது.* 19

**ப-ரை:** நட்டார் - (தன்னிடம்) நட்புக்கொண்டவரை, புறம் கூறுன் - புறங்கூருதவனுய், வாழ்தல் - வாழ்வது, நனி இனிது - மிக இனிதாம்; பட்டாங்கு - நூல்முறையை, பேணி - காத்து, பணிந்து - அடங்கி, ஒழுகல் - நடத்தல், முன் இனிது - மிக இனிதாம்; முட்டு இல் - குறைவில்லாது, பெரும் பொருள் - மிக்க பொருளை, ஆக்கியக்கால் - தேடினுல், அது - அப்பொருளை, தக்க உழி - தகுந்தோர்களுக்கு, ஈதல் - கொடுத்தல், இனிது - இனிதாகும்.

**க-ரை:** நண்பரைப் புறங்கூருதிருத்தலும், நன்னூல் வழி வாழ்தலும், பொருளை நல்வழியில் ஈதலும் இனிதாகும்.

பட்டாங்கு - நூல். புறங்கூருன் - முற்றெச்சம். மற்று - அசை. தக்குழி - தக்க+உழி; அகரம் தொக்கது. 'முட்டில் ஈதல் இனிது' என்பது 'அற்ருர் அழிபசி தீர்த்தல் அஃதொருவன் - பெற்ருன் பொருள்வைப் புழி'- (குறள் - 226) எனும் கருத்தை எடுத்துக் காட்டுகிறது.

**புலவர் உரை**

வஞ்சகரை நீக்கல், புலவரின் பொன்னுரையைப் போற்றல், மன்னுயிரைத் தன்னுயிராய் மதித்தல், இவை இன்பந் தருவன.

***சலவரைச் சாரா விடுதல் இனிதே;***
***புலவர்தம் வாய்மொழி போற்றல் இனிதே;***
***மலர்தலை ஞாலத்து மன்உயிர்க்[கு] எல்லாம்***
***தகுதியால் வாழ்தல் இனிது.*** **20**

**ப-ரை:** சலவரை - வஞ்சகரை, சாரா - (தன்னேடு) அடையாது, விடுதல் - நீங்குதல், இனிது - இனிதாம்; புலவர்தம் - அறிவுடையோருடைய, வாய் மொழி - வாய்ச் சொற்களை, போற்றல் - பாதுகாத்தல், இனிது - இனிதாம்; மலர் தலை - அகன்ற இடத்தையுடைய, ஞாலத்து - பூமியில் உள்ள, மன் உயிர்க்கு எல்லாம் - நிலைபெற்ற எல்லா உயிர்க்கும், தகுதியால் - உரிமைப்பட, வாழ்தல் - வாழ்வது, இனிது - இனிதாகும்.

**க-ரை:** வஞ்சகரை அடுத்து வாழாமையும், புலவர் மொழி போற்றலும், மன்னுயிரைத் தன்னுயிர்போல் வாழ விரும்புதலும் இன்பங்கொடுக்குமாம்.

சலவர் - வஞ்சகர். புலம் - அறிவு. புலவர் - அறிஞர். 'மன்னுயிர்க்கெல்லாம் தகுதியாய் வாழ்தல்' ஆவது, தன்

னுயிரென வாழ விரும்பி ஆற்றலாம், 'யாதும் ஊரே யாவரும் கேளிர்'- (புறம் - 192) எனும் கருத்தை வலியுறுத்திற்று.

**திறம் தெரிந்து வாழ்தல்**

பிறன் பொருள் விரும்பாமை, அறமே புரிதல், அறிவிலிகள் அணுகா வகை வாழல், இவை இன்பந் தருவன.

*பிறன்கைப் பொருள்வெளவான் வாழ்தல் இனிதே;*
*அறம்புரிந்[து] அல்லவை நீக்கல் இனிதே;*
*மறந்தேயும் மாணா மயரிகள் சேராத்*
*திறந்தெரிந்து வாழ்தல் இனிது.* **21**

**ப-ரை:** பிறன் - பிறனுடைய, கைப்பொருள் - (சேர்த்து வைத்த) உரிய பொருளை, வெளவான் - அபகரியாதவனாய், வாழ்தல் - வாழ்வது, இனிது - இனிதாம்; அறம் புரிந்து - அறத்தைச் செய்து, அல்லவை - அறமல்லாத தீய செயல்களை, நீக்கல் - நீக்குதல், இனிது - இனிதாம்; மறந்தேயும் - மறந்தேனும், மாணா - மாட்சிமைப்படாத, மயரிகள் - அறிவிலிகளை, சேரா திறம் - சேராத வழிகளை, தெரிந்து - ஆராய்ந்து, வாழ்தல் - வாழ்வது, இனிது - இனிதாகும்.

**க-ரை:** பிறன் பொருள் விரும்பாச் செயலும், அல்லவை அகற்றி அறத்தொடு வாழலும், அறிவிலிகள்வழி அகற்றி வாழ்தலும், என்றும் இன்பமாம்.

மயரிகள் - அறிவிலிகள். திறம் – வழி. 'மறந்தேயும்' எனும் சொல், 'கனவிற்கூட' எனும் வழக்குப் போல நின்று கட்டாயத்தை வலியுறுத்திற்று.

**வரவுக்கேற்ப வழங்கல்**

வரவுக்கேற்ப வழங்கல், பாரபட்சம் இல்லாச் செயல், பெரும் பயன் எண்ணி விரும்பியதை ஆற்றாமை. இவை இன்பந் தருவன.

*வருவாய் அறிந்து வழங்கல் இனிதே;*
*ஒருவர்பங்[கு] [1] ஆகாத ஊக்கம் இனிதே;*
*பெருவகைத்[து] ஆயினும் பெட்டவை செய்யார்*
*திரி[பு]இன்றி வாழ்தல் இனிது.* **22**

**ப-ரை:** வருவாய் - (தமக்குப்) பொருள் வருகின்ற வழியின் அளவினை, அறிந்து - தெரிந்து, வழங்கல் - (பிறர்க்குக்)

பிற பாடம்: 1. ஒருவர்பாங்கு,

கொடுத்தல், இனிது - இனிதாகும்; ஒருவர் பங்கு ஆகாத - ஒருவர் சார்பாகாத, ஊக்கம் — (குறிக்கோள்) மன எழுச்சி, இனிது - இனிதாம்; பெருவகைத்து ஆயினும் - பெரிய பயனை யுடைத்தாயினும், பெட்டவை - (தாம்) விரும்பியவற்றை, செய் யார் - செய்யாதவராய், திரிபு இன்றி - (தம் நிலையில்) வேறு பாடு இல்லாமல், வாழ்தல் - வாழ்வது, இனிது - இனிதாகும்.

**க-ரை:** வருமானத்திற்கேற்ப ஈதலும், ஒருவர் சார் பற்ற மன எழுச்சியும், பெரும் பயனுயினும் விரும்பாது வாழ்தலும் இன்பமாம்.

வருவாய் - ஆகுபெயர். பெட்டவை - பெட்பு அடியா கப் பிறந்த வினையாலணையும் பெயர். வருவாய் அறிந்து வழங்கல் என்பதை, 'வளத்தக்காள்' (குறள் - 51), 'ஆற் றின் அளவறிந்தீக' (குறள் - 477) எனும் கருத்துக்களால் அறிக. நடுநிலைமை அழியாதிருக்க வேண்டுமென்பதை, 'ஒருவர்பங்காகாத ஊக்கம்' என்ருர். பெரும் பயன் அடைவ தாயினும் தன்னியல்பில் திரியாது வாழ்தலை 'பெருவகை... வாழ்தல் இனிது' என்ருர்.

**சோலையும் குளமும்**

சோலையும் குளமும் ஆக்கலும், ஆவும் பொன்னும் அந்தணர்க்களித்தலும், சூதரைச் சேராச் செயலும் இன்பந் தருவனவாம்.

***காவோ[டு] அறக்குளம் தொட்டல் மிகஇனிதே;***
***ஆவோடு பொன்ஈதல் அந்தணர்க்கு முன்இனிதே;***
***பாவமும் அஞ்சாராய்ப் பற்றும் தொழில்மொழிச்***
***சூதரைச் சோர்தல் இனிது.*** ***23***

**ப-ரை:** காவோடு - சோலையோடு, அறக்குளம் - நன் னீர்க்குளத்தை, தொட்டல் - வெட்டுதல், மிக இனிது - மிக வும் இனிதாம்; அந்தணர்க்கு - செந்தண்மை பூண்ட செவ்வி யர்க்கு, ஆவோடு - பசுவோடு, பொன் ஈதல் - பொன்னைக் கொடுத்தல், முன் இனிது - மிக இனிதாம்; பாவமும் அஞ்சா ராய் - தீயசெயல்கள் புரிதலுக்கு அஞ்சாதவராய், பற்றும் - (அப் பழிச்சொல்லைப்) பற்றுகின்ற, தொழில் - செயலையும், மொழி - சொல்லையும் உடைய, சூதரை - சூதாடுவோரை, சோர்தல் - நீக்கல், இனிது - இனிதாகும்.

**க-ரை:** சோலையும் குளமும் வெட்டுதலும், அந்த ணர்க்கு ஆவுடன் பொன் அளித்தலும், பாவத்திற்கஞ்சாச் சூதரை நீக்கலும் இன்பந் தருமாம்.

ஆவோடு பொன் பெறும் அந்தணர், பிற்கால வழக்கில் உள்ள தானம் ஏற்றலைக் குறித்தது. 'சிறுமை பல செய்து சீரழிக்கும் சூது'- (குறள் - 934) எனும் கருத்தமைந்துள்ளது. மரம் நாட்டலும் ஊருணி அமைத்தலும் பொதுத்தொண்டு கருதி என்பதை, 'காவோடு அறக்குளம் தொட்டல்' என்றார். தொழில் மொழி - எச்ச உம்மை தொக்கது. தொட்டல் - தோண்டல்; தொழிற் பெயர். 'தொட்டனைத் தூறும் மணற்கேணி'- (குறள் - 396)இல் இப் பொருளாதல் அறிக.

## ஒன்றே ஆயினும் நன்றே செய்

மேன்மேல் உயர்வோன் வெகுளாதல், ஒன்றே ஆயினும் நன்றே ஆற்றல், கிடைக்காததற்கு வருந்தாது கடமை புரிதல். இவை இன்பந் தருவன.

***வெல்வது வேண்டி வெகுளாதான் நோன்[பு]இனிதே;***
***ஒல்லும் துணையும்ஒன்[று] உய்ப்பான் பொறைஇனி***
***இல்லது காமுற்[று] இரங்கி இடர்ப்படார் [தே;***
***செய்வது செய்தல் இனிது. 24***

**ப-ரை:** வெல்வது - மேம்படுதலை, வேண்டி - விரும்பி, வெகுளாதான் - கோபியாதவனது, நோன்பு - ஆற்றும் செயல், இனிது - இனிதாம்; ஒல்லும் துணையும் - கூடிய மட்டும், ஒன்று உய்ப்பான் - (எடுத்துக்கொண்ட செயலில்) ஒரு செயலைக் குறைவற நடத்துவோனது, பொறை - ஆற்றல், இனிது - இனிதாம்; இல்லது காமுற்று - (தம்மிடத்து) இல்லாத பொருளை விரும்பி, இரங்கி - (அது கிடைக்காததால்) மனம் வருந்தி, இடர்ப்படார் - துன்பப்படாதவராய், செய்வது - (தம்மிடம் இருப்பதைக்கொண்டு) செய்யவேண்டிய செயலை, செய்தல் - செய்வது, இனிது - இனிதாகும்.

**க-ரை:** மேன்மையுறுவோர் வெகுளாதிருத்தலும், ஒன்றேயாயினும் முடிந்தவரை நன்றே ஆற்றலும், கிடைக்காதவற்றுக்கு இடர்ப்படாது செய்யும் செயலை செவ்வனே புரிதலும் இன்பமாம்.

இல்லது - குறிப்பு வினையாலணையும் பெயர். உயிர் எதையும் விரும்பல் இயல்பு. கிடைக்காத பொருளைக்கிளர்ந்து கிளர்ந்து விரும்பி அழிதலும் இயல்பு. ஆதலின் இவ்விடர் ஒழித்துத்தன் கருமம் ஆற்றலில் கவனம் செலுத்தல் வேண்டும் என்பதை 'இல்லது........செய்தல்' என்றார். பொறை - ஆற்றல்; தொழிற்பெயர்.

### புலன் அடக்கல்

புலன் விரும்பலை அடக்கலும், கைப்பொருள் போயினும் கல்லாரை நீக்கலும், ஒழுங்கிலார் உறவை ஒழித்தலும் இன்பந் தருவனவாம்.

*ஐவாய வேட்கை அவாவடக்கல் முன்இனிதே;*
*கைவாய்ப் பெறினும் கல்லார்கள் தீர்(வு)இனிதே;*
*நில்லாத காட்சி நிறையில் மனிதரைப்*
*புல்லா விடுதல் இனிது.* 25

**ப-ரை:** ஐவாய - ஐந்து வழிகளின் வழியாய் உண்டாகின்ற, வேட்கை - விருப்பத்தையும், அவா - (அவ்விருப்பால் தோன்றும்) நினைவையும், அடக்கல் - ஒழித்தல், இனிது - இனிதாம்; கைவாய பொருள் - கைப்பொருளை, பெறினும் - பெறுவதாயினும், கல்லார்கண் - கல்லாதவரை, தீர்வு - விடுதல், இனிது - இனிதாம்; நில்லாத காட்சி - நிலையிலாச் செயலினையுடைய, நிறை இல் - (நெஞ்சில்) நிறுத்தல் இல்லாத, மனிதரை - மக்களை, புல்லா விடுதல் - சேராது நீங்குதல், இனிது - இனிதாகும்.

**க-ரை:** புலனைந்தை அடக்கலும், கைப்பொருளைப் பெறுவதாயினும் கல்லாரை அகற்றலும், நெஞ்சை நல்வழியில் நிறுத்தாரைச் சேராது வாழ்தலும் இனிமையை நல்குமாம்.

ஐவாய் - மெய், வாய், கண், மூக்கு, செவி. காட்சி - அறிவு. புல்லா - புல்லாது என்பதன் ஈறு கெட்டது. பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கம் - நெறிநின்றார் நீடுவாழ் வார்' (குறள்-6) இக் கருத்தை 'ஐவாய வேட்கை அவா வடக்கல்' என்றார். 'நில்லாத காட்சி நிறையில் மனிதர்'- இஃது அலைகின்ற மனம் அறிவு முதலியவற்றை ஒரு வழி நிறுத்தும் தன்மையிலாரைக் குறித்தது.

### மதிப்புடன் வாழ்

விரும்பி வந்தோர் வெம்பிச் செல்லாமை, மதிப்புடன் வாழல், ஒளிக்காது நல்கல், இவை இன்பந் தருவன.

*நச்சித்தன் சென்றார் நசைகொல்லா மாண்(பு)இனிதே;*
*உட்கில் வழிவாழா ஊக்கம் மிகஇனிதே;*
*எத்திறத் தானும் இயைவ கரவாத*
*பற்றினில் பாங்(கு)இனிய(து) இல்.* 26

**ப-ரை:** நச்சி - (பொருளைப்பெற) விரும்பி, தன் சென்றோர் - தன்னை அடைந்தவரது, நசை - விருப்பம், கொல்லா - கெடாத, மாண்பு - மாட்சிமை, இனிது - இனிதாம்; உட்கு இல் வழி - மதிப்பு இல்லாத இடத்து, வாழா - வாழாமைக்கேது வாகிய, ஊக்கம் - மன எழுச்சி, மிக இனிது - மிகவும் இனிதாம்; எ திறத்தானும் - எவ்வாறுயினும், இயைவ - கொடுக்க முடிந்தவற்றை, கரவாத - ஒளிக்காத, பற்றினில் - அன்பினில், பாங்கு இனியது - நன்மைதரும் இனிமை, இல் - வேறென்று மில்லை.

**க-ரை:** தன்னிடம் விரும்பிவந்தோரை வெறுமையாய் அனுப்பாச் செயலும், மதியாரிடை வாழாமையும், எவ்வழியும் முடிந்ததைக் கொடுக்கும் அன்புடைமையும் நன்மையே நல்கும்.

நச்சி - விரும்பி. உட்கு - மதிப்பு. விருப்பம் வரவரத் தேய்ந்து அழியுமாறு செய்தலை, 'நசை கொல்லுதல்' என்றார். மதியாதார் தலைவாசல் மிதிக்கவேண்டாம் எனுங் கருத்தை 'உட்கில் வழி' 'வாழா ஊக்கம்' என்று வலியுறுத்தினார்.

### குற்றம் பாராட்டாரைக் கொள்ளல்

பிறர்க்கு ஈதல், மானங்கெட வாழாமை, குற்றம் கொள்ளாரைக் கூடல், இவை இன்பந் தருவன.

***தானம் கொடுப்பான் தகைஆண்மை முன் இனிதே;***
***மானம் படவரின் வாழாமை முன்இனிதே;***
***ஊனம்கொண் டாடார் உறுதி உடையவை***
***கோள்முறையால் கோடல் இனிது.*** 27

**ப-ரை:** தானம் கொடுப்பான் - பொருள் முதலியவற்றைப் பிறருக்குக் கொடுப்பவனது, தகை ஆண்மை - தகுதி நிறைந்த முயற்சி, முன் இனிது - மிகவும் இனிதாம்; மானம் - மான மானது, படவரின் - கெடவரின், வாழாமை - உயிர் வாழா திருத்தல், முன் இனிது - மிகவும் இனிதாம்; ஊனம் கொண்டாடார் - குற்றம் பாராட்டாதவர், உறுதி உடையவை - நன்மை பயக்கும் செயல்களை, கோள் முறையால் - கொள்ளும் முறைப்படி, கோடல் - கொள்ளுதல், இனிது - இனிதாகும்.

**க-ரை:** பிறர்க்குக் கொடுக்கும் பெருந்தன்மையும், மானம் அழிய வாழாத செயலும், குற்றம் பாராட்டாரைக் கூட்டிக்கொள்ளலும், இனிமையே பயக்குமாம்.

குற்றம் நீக்கி குணம் கொள்க எனுங் கருத்தை, 'ஊனங் கொண்டாடார் உறுதி உடையவை - கோள்முறையால் கோடல்' என்றார். இம்மை இன்பமும் பிறவும் தரும் நல்லொழுக்கச் செயல்களை, 'உறுதி உடையவை' என்றார்.

### தீமைகூறாத் தெளிவு

விருப்பிலானை வற்புறுத்தாமை, கூற்றம் வருமுன் நல்லன ஆற்றல், தீமை கூறாது தெளிதல், இவை இன்பந் தருவன.

***ஆற்றானை ஆற்(று)என்று அலையாமை முன்இனிதே;***
***கூற்றம் வர(வு)உண்மை சிந்தித்து வாழ்வு(இனிதே);***
***ஆக்கம் அழியினும் அல்லவை கூறாத***
***தேர்ச்சியில் தேர்(வு)இனிய(து) இல். 28***

**ப-ரை:** ஆற்றானை - (ஒரு தொழிலைச்) செய்யமாட்டாதானை, ஆற்று என்று - (அதனைச்) செய்யென, அலையாமை - வருத்தாமை, முன் இனிது - மிகவும் இனிதாம்; கூற்றம் - யமனது, வரவு - வருகையின், உண்மை - உறுதியை, சிந்தித்து - நினைத்து, வாழ்வு - வாழ்தல், இனிது - இனிதாம்; ஆக்கம் அழியினும் - செல்வம் அழிந்தாலும், அல்லவை கூறாத - (பிறர் மனம் வருந்தும்படி) தீய சொற்களைச் சொல்லாத, தேர்ச்சியில்-தெளிவினும், தேர்வு - தெளிவான, இனியது-இனிமையுடையது, இல் - வேறொன்றுமில்லை.

**க-ரை:** தொழில் செய்யாதானை செய் என்று கூறலும், யமன் வரும் முன்பு நல்லன ஆற்றலும், பொருள் அழியினும் பொருந்தாச் செயலை ஆற்றாமையும் இன்பந்தருவனவாம்.

ஆற்றானை - வினையாலணையும் பெயர். வரவு - வருதல்; தொழிற்பெயர். ஆக்கம் - மேன்மேல் உயர்தல்; செல்வம். விருப்பில்லாதவனை ஏவும் தொழில் வீண் என்பதை, 'ஆற்றானை ஆற்றென்று அலையாமை' என்றார். 'கூற்றம் வரவுண்மை' என்பதை, 'கணிச்சிக் கூர்ம்படை கடுந்திறல் ஒருவன் - பிணிக்குங்காலை இரங்குவீர் மாதோ' எனும் (புறம் - 195)ஆல் அறிக. பயனற்ற மொழிகளைக் கூறாதிருத்தலை, 'அல்லவை கூறாத' என்றார். வள்ளுவரும், 'பொருள்தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார் மருள்தீர்ந்த - மாசறு காட்சியவர்' - (குறள் - 199) என்பதால் அறிக.

## உயர்வே உள்ளல்

இழிந்தோரை நீக்கல், உயர்வை நினைக்கும் மனம், பிறரை இகழாச் செயல் இவை இன்பந்தருவன.

***கயவரைக் கைஇகந்து[1] வாழ்தல் இனிதே;***
***உயர்(வு)உள்ளி ஊக்கம் பிறத்தல் இனிதே;***
***எளியர் இவர்என்(று) இகழ்ந்(து)உரையார் ஆகி***
***ஒளிபட வாழ்தல் இனிது.*** ***29***

**ப-ரை:** கயவரை - கீழ்மக்களை, கைஇகந்து - நீங்கி, வாழ்தல் - வாழ்வது, இனிது - இனிதாம்; உயர்வு உள்ளி - (மேன் மேல்) உயர்தலை நினைத்து, ஊக்கம் பிறத்தல் - மன எழுச்சி உண்டாதல், இனிது - இனிதாம்; இவர் எளியர் என்று - இவர் வறியர் என்று, இகழ்ந்து - (அவரை) இழிவுபடுத்தி, உரையார் ஆகி - கூறுராகி, ஒளிபட - புகழ்பட, வாழ்தல் - வாழ்வது, இனிது - இனிதாகும்.

**க-ரை:** கீழோரை நீங்கி வாழ்தலும், மேன்மேல் உயரும் குறிக்கோளும், எளியாரை இகழாது புகழ்பட நிற்றலும் இன்பமாகும்.

'உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல்'- (குறள் - 596) எனும் கருத்தை, 'உயர் உள்ளி ஊக்கம் பிறத்தல்' என்றார். தமக்குக் கீழானவரைத் தாழ்வாக மதியாதிருத்தலை வலியுறுத்த, 'எளியர் ... ... ... ஒளிபட வாழ்தல்' என்றார். புகழ் பெறும் பல வழிகளில் இதுவும் ஒன்றெனக் குறிக்க 'ஒளிபட வாழ்தல்' என்றுரெனினுமாம்.

## செய்ந்நன்றி

செய்ந்நன்றி அறிதல், ஓரஞ் சொல்லாதிருத்தல், அடைக்கலப் பொருளைக் கொள்ளாமை, இவை இன்பந் தருவன.

***நன்றிப் பயன்தூக்கி வாழ்தல் நனிஇனிதே;***
***மன்றக் கொடும்பா(டு) உரையாத மாண்(பு)இனிதே;***
***அன்(று)அறிவார் யாரென்(று) அடைக்கலம்***
***நன்றியின் நன்(கு)இனிய(து) இல்.*** ***[வெளவாத***

**ப-ரை:** நன்றி பயன் - (ஒருவன் ஆற்றிய) நன்றியின் பயனை, தூக்கி - கருதி, வாழ்தல் - வாழ்வது, நனி இனிது -

பிற பாடம்: 1. கைகழிந்து, கைஇகழ்ந்து.

மிக இனிதாம்; மன்றம் - நீதி மன்றத்தில், கொடும்பாடு - மாறுபாடு (ஓரம்), உரையாத-சொல்லாத, மாண்பு-மாட்சிமை, இனிது - இனிதாம்; அன்று - (தன்னிடம் பொருள் வைத்த) அந்நாள், யார் அறிவார் என்று - அறிவார் ஒருவரும் இல ரென்று, அடைக்கலம் - அடைக்கலப் பொருளை, வௌவாத - கரவாத, நன்றியின் - நன்மையினும், நன்கு இனியது - மிக வும் இனியது, இல் - வேறொன்றுமில்லை.

**க-ரை:** பிறர் செய்நன்றியை நினைத்து வாழ்தலும், பொய்ச்சாட்சி கூறாத பெருமையும், அடைக்கலப் பொருளை அபகரியாச் செயலும் இன்பம் கொடுக்கும்.

கொடும்பாடு - பொய்ச் சாட்சி. மன்றம் - மன்றத்தின் கண்; ஏழனுருபு தொக்கன. பயன் தூக்கார் செய்த நன்றி யின் பயனை நினைத்தல் என்பதனை, 'நன்றிப் பயன் தூக்கி' என்றார். சான்று ஒருவரிலை என்பதை விளக்க, 'அன் றறிவார் யார்' என்றார்.

## ஆராய்ந்து அறி

அடைந்தோர் வருந்தாவகை புரிதல், கடன் பெற்றும் ஆவன அறிதல், ஆராய்ந்து உணர்தல், இவை இன்பந் தருவன.

***அடைந்தார் துயர்கூரா ஆற்றல் இனிதே;***
***கடன்கொண்டும் செய்வன செய்தல் இனிதே;***
***சிறந்(து)அமைந்த கேள்வியர் ஆயினும் ஆராய்ந்து***
***அறிந்(து)உரைத்தல் ஆற்ற இனிது.*** **31**

**ப-ரை:** அடைந்தார் - (தம்பால் அடைக்கலமாக வந்து) அடைந்தார், துயர் கூரா - துன்பம் மிக்கடையாது, ஆற்றல் - போற்றுவது, இனிது - இனிதாம்; கடன் கொண்டும் - கடன் வாங்கியும், செய்வன - செய்வோர்க்கு வேண்டுவனவற்றை, செய்தல் - செய்வது, இனிது - இனிதாம்; சிறந்து - (அறிவால்) சிறந்து, அமைந்த - நிறைந்த, கேள்வியராயினும் - நூற் கேள்வியுடையராயினும், ஆராய்ந்து அறிந்து - ஆராய்ந்து அறிந்தே, உரைத்தல் - சொல்லுதல், ஆற்ற இனிது - மிக இனிதாகும்.

**க-ரை:** அடைக்கலமாய் வந்தோர் துன்பம் அடையா மையும், கடன் பெற்றும் ஆவன செய்தலும், அறிவுடை யோராயினும் ஆராய்ந்து ஆற்றலும் இனிமை தரும்.

அடைந்தார்-வினையாலணையும் பெயர். கூரா -கூராது எனும் வினையெச்சம் கடைக்குறைந்து வந்தது. 'கடன் கொண்டும் செய்வன செய்தல்' என்பது தமிழ் வழக்கன்று. சான்றோர் மாட்டும் ஓரோவழி அறியாமையுளதாகலின் 'அறிந்து உரைத்தல்' என்றார்.

**கற்றோரின் பயன் சொல்**

கற்றோர் கூறும் பயன் சொல், அன்பிலா அரசனிடம் வாழாமை, நம்பினோர்க்குத் தீமை புரியா நற் செயல், இவை இன்பந் தருவன.

***கற்றறிந்தார் கூறும் கருமப் பொருள்இனிதே;***
***பற்(று)அமையா வேந்தன்கீழ் வாழாமை முன்இனிதே;***
***தெற்றென இன்றித் தெளிந்தாரைத் தீங்கூக்காப்***
***பத்திமையில் பாங்கினிய(து) இல்.*** **32**

**ப-ரை:** கற்று - (நூல்களைக்) கற்று, அறிந்தார் - (அவற்றின் பொருளை) அறிந்தவர், கூறும் - சொல்லுகின்ற, கருமப் பொருள் - சொல்லினது பயன், இனிது - இனிதாம்; பற்று அமையா – (குடிகளிடத்து) அன்பு இல்லாத, வேந்தன் கீழ் - அரசனின் கீழிருந்து, வாழாமை - வாழாதிருத்தல், முன் இனிது - மிகவும் இனிதாம்; தெற்றென இன்றி - ஆராய்தல் இல்லாது- தெளிந்தாரை - நம்பினவருக்கு, தீங்கு ஊக்கா - தீமை புரியாத, பத்திமையின் - அன்புடைமையினும், பாங்கு இனியது - சிறந்த இனிமையுடையது, இல் - வேறொன்றுமில்லை.

**க-ரை:** அறிவுடையோர் அற உரையும், அன்பிலா அரசரிடம் வாழாதிருத்தலும், நம்பினோர்க்குத் தீங்காற்றா நற்செயலும் நன்மையே நல்கும்.

பத்தி - பக்தி. சொல்லுதல் இனிமை இலையெனினும் அதன் பயன் இனிமைதரலின், 'கூறும் கருமப் பொருள் இனிது' என்றார். கொடுங்கோல் என்பதை, 'பற்றமையா' எனக் குறிப்பால் உணர்த்தினார். முன்பின் அறியானிடம் அன்பு கொள்ளல் ஆபத்து விளைவிக்கும். ஆயினும் அவன் அன்புடையனாக இருத்தல் இன்பம்தரும் என்பதை, 'தீங்கூக்காப் பத்திமை' என்றார். தெளிந்தாரை - தெளிந்தார்க்கு - உருபுமயக்கம்.

**ஊரொரடு வாழல்**

ஊரார் வெறுக்காது வாழும் ஒழுக்குடையார், சோம்பல் இல்லாத் தலைவன், சமாதானம் புரியும் வேந்தன், இவர் இன்பம்பெறுவர்.

***ஊர்முனியா செய்(து)ஒழுகும் ஊக்கம் மிகஇனிதே;***
***தானே மடிந்(து)இராத் தாளாண்மை முன்இனிதே;***
***வாள்மயங்கு மண்(டு)அமருள் மாருத மாமன்னர்***
***தானை தடுத்தல் இனிது. 33***

**ப-ரை:** ஊர் முனியா - ஊரார் வெறுக்காதனவற்றை, செய்து ஒழுகும் - செய்து ஒழுகுகின்ற, ஊக்கம் - மனஎழுச்சி, மிக இனிது - மிக இனிதாம்; தானே - (தலைவனாகிய) தானே, மடிந்து இரா-சோம்பல் இல்லாது, தாள் ஆண்மை-முயற்சியை ஆளுந்தன்மை, முன் இனிது - மிகவும் இனிதாம்; வாள் மயங்கு - (போரினிடத்து) வாளோடு வாள் கலக்கின்ற, மண்டு அமருள் - மிக்கெழும் போரில், மாருத - மீளாத, மாமன்னர் - பெருமையுடைய அரசரது, தானை - சேனைகளை, தடுத்தல் - (போர் நடவாதவாறு) விலக்குதல், இனிது - இனிதாகும்.

**க-ரை:** ஊரார் வெறுக்காச் செயலில் ஒழுகுதலும், சோம்பலில்லாத் தலைவனின் ஆண்மையும், அரசன் போரில் சமாதானம் புரிதலும் நன்மை தரும்.

ஊர் - ஊரார்; இடவாகு பெயர். முனிதல் - வெறுத்தல். தானே - ஏகாரம் பிரிநிலை. எத்துணை ஆற்றல் இருப்பினும் சிறிது தளர்வு காணப்படுவது இயல்பேயாயினும், அத் தளர்வெனும் சோம்பலை அகற்றி வாழ்தல் சிறப்பு என்பதை, 'தானே மடிந்திரா தாளாண்மை' என்றார். அரசனுக்குப் போர் சிறந்ததேயாயினும், அதனைவிடச் சிறந்தது போர் நடவாதவாறு சமாதானம் புரிதலேயாகும் என்பதை, 'தானை தடுத்தல்' என்றார்.

**மறதியின்றிச் சொல்லல்**

இரவுவழி செல்லாமை, மறதியின்றிச் சொல்லல், அறிவிலிகள் அணுகாவழி ஆற்றல், இவை இன்பந் தருவன.

***எல்லிப் பொழுது வழங்காமை முன்இனிதே;***
***சொல்லுங்கால் சோர்(வு)இன்றிச் சொல்லுதல் [மாண்புஇனிதே;***
***புல்லிக் கொளினும் பொருள்அல்லார் தம்கேண்மை***
***கொள்ளா விடுதல் இனிது. 34***

**ப-ரை:** எல்லி பொழுது - இரவின் கண், வழங்காமை - நடவாமை, முன் இனிது - மிகவும் இனிதாம், சொல்லுங்கால் - (அவையின்கண்) சொல்லும்போது, சோர்வு இன்றி - மறதி

இல்லாமல், சொல்லுதல் - கூறுதலின், மாண்பு - பெருமை, இனிது - இனிதாம்; பொருள் அல்லார் - ஒரு பொருளாக மதிக்கப் படாதவர், புல்லி கொளினும் - (தாமே வந்து நட்பினரைப் போல) சேர்ந்துகொண்டாலும், கேண்மை - (அவர்) நட்பினை, கொள்ளாவிடுதல் - கொள்ளாது நீக்குதல், இனிது - இனிதாகும்.

**க-ரை:** இரவில் நடந்து பிற ஊர் செல்லாமையும், மறதியின்றி அவையில் சொல்லுதலும், வலிய வந்து சேரினும் அற்பரை அகற்றி வாழ்தலும் இன்பமாகும்.

எல்லி - இரவு. விடப்பூச்சி ஊர்தலாலும், கள்வர் முதலியோர் திரிதலாலும் துன்பம் நேரிடும் என்பதை, 'எல்லிப் பொழுது வழங்காமை' என்றார். அறிவிலான் வலிய வந்து அணுகினும், அவரை நீக்கி வாழல் அறிவுடையோர்க்கழகு என்பதையும், அறிவிலார் நாம் விரும்பாவிடினும் தானே வருவர் என்பதையும், 'புல்லிக்...............விடுதல்' சிறப்பென்றார். வழங்காமை நடவாமை எனும் கருத்து 'முந்நீர் வழங்கு நாவாய்' - (புறம்) 13-ஆல் அறிக.

### ஒத்த அன்பு

ஒற்றரால் ஒற்றி வாழல், முன் அறிந்து முறை செய்தல், அரசன் அன்புடையராதல், இவை இன்பந்தருவன.

**ஒற்றினுல் ஒற்றிப் பொருள்தெரிதல் முன்இனிதே;**
**முன்தான் தெரிந்து முறைசெய்தல் முன்இனிதே;**
**பற்(று)இலனுய்ப் பல்லுயிர்க்கும் பாத்(து)உற்றப் பாங்**
**வெற்றிவேல்[1] வேந்தர்க்(கு) இனிது. [கறிதல்**

**ப-ரை:** ஒற்றினுல் - (அரசர்கள்) ஒற்றராலே, ஒற்றி - உளவு செய்து, பொருள் தெரிதல்-(அதன்) பயனை அறியும், மாண்பு - பெருமை, இனிது - இனிதாம்; முன்தான் தெரிந்து - (குற்றத்தை) முதலில் தான் அறிந்து, முறை செய்தல் - நீதி வழங்கல், முன் இனிது - மிகவும் இனிதாம்; பற்று இலனுய் - (ஒருவரிடம் மட்டும்) அன்பு இல்லாதவனுய், பல் உயிர்க்கும் - எல்லா உயிர் இடத்தும், பாத்து - (அவ் வன்பினைப்) பகுத்து, பாங்கு உற்று - தோழமை கொண்டு, அறிதல் - அறிவது, இனிது - இனிதாகும்.

**க-ரை:** ஒற்றராலே ஒற்றுற்றி ஆராய்தலும், முன் அறிந்து பின் நீதிவழங்கும் நற்செயலும், அரசன் எல்லோரிடமும் ஒத்த அன்புடையனுதலும் இனிதாம்.

---

பிற பாடம்: 1. வெற்றல் வேல்.

'ஒற்றிஞல் ஒற்றிப் பொருள் தெரிதல்' என்பதை வள்ளுவர், 'ஒற்றிஞன் ஒற்றிப் பொருள்தெரியா மன்னவன் - கொற்றம் கொளக்கிடந்த தில்'- (குறள் - 538) எனக் கூறியதை நோக்குக. அரசன் வேண்டியவர், வேண்டாதவர் என்ற வேறுபாடின்றி ஒத்த அன்போடு கொள்ள வேண்டும் என்பதை, 'பற்றிலனுய்' என்ருர்.

**சினம் நீக்கல்**

பொருமை கொள்ளாமை, சினம் நீங்கி வாழல், விரும்பும் பொருளேக் கவராத் தன்மை, இவை இன்பந் தருவன.

***அவ்வித்( து ) அழுக்கா( று ) உரையாமை முன் இனிதே;***
***செவ்வியனுய்ச் செற்றுச் சினங்கடிந்து வாழ்[ வு ] இனி***
***கவ்வித்தாம் கொண்டுதாம் கண்டது காமுற்று [தே;***
***வவ்வார் விடுதல் இனிது. 36***

**ப-ரை:** அவ்வித்து (மனம்) பொருது, அழுக்காறு-பொருமைக்கேதுவான சொற்களே, உரையாமை-சொல்லாதிருத்தல், முன் இனிதே - மிகவும் இனிதாம்; செவ்வியனுய் - தகுதியுடையவனுய், சினம் செற்று - கோபத்தை வெறுத்து, கடிந்து - நீக்கி, வாழ்வு - வாழ்தல், இனிது - இனிதாம்; தாம் கண்டது - தாம் பார்த்த பொருளே, காமுற்று - விரும்பி, கவ்வி கொண்டு – அதனில் மனம் அழுந்திக் கிடப்பினும். வவ்வார் - (அதனே) அபகரியாதவராய், விடுதல் - மறத்தல், இனிது - இனிதாகும்.

**க-ரை:** பொருமையுருமையும், கோபத்தை நீக்கி வாழ்தலும், பிறர் பொருளே மனதாலும் விரும்பாத மாண்பும் நல்லன பயக்கும்.

அழுக்காறு - அழுக்கறு பகுதி; முதனிலேத் திரிந்த தொழிற் பெயர். கவ்வித்தாம் - தாம் அசை. 'அவ்வித் தழுக்கா றுடையானேச் செய்யவள் - தவ்வையைக் காட்டி விடும்'- (குறள் - 167) கருத்தை, 'அவ்வித் தழுக்காறு செய்யாமை' என்ருர். வவ்வார் - எதிர்மறை ஆகாரம் புணர்ந்து கெட்டது. 'செற்றுச் சினங் கடிந்து' என்பதை, 'சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும் - ஏமப் புணையைச் சுடும்'- (குறள் - 306) என்பதால் அறிக. மனத்தாலும் பிறர் பொருளே நினேயாத பேராண்மையை, 'கவ்வித் தாம்..........விடுதல்' என்ருர்.

## இளமையில் மூப்பு

இளமை முதல் அறம் ஆற்றல், நல்ல சொல் கேட்டல், பெண்ணை விடமென நினைத்தல், இவை இன்பந் தருவன.

*இளமையை மூப்[பு]என்[று] உணர்தல் இனிதே;*
*கிளைஞர்மாட்[டு] அச்[சு]இன்மை கேட்டல் இனிதே;*
*தடமென் பணைத்தோள் தளிரிய லாரை*
*விடமென்(று) உணர்தல் இனிது.* 37

**ப-ரை:** இளமையை - (தனக்குள்ள) இளமைப் பருவத்தை, மூப்பு என்று - முதுமைப் பருவமென்று, உணர்தல் - நினைத்தல், இனிது - இனிதாம்; கிளைஞர் மாட்டு - சுற்றத்தாரிடத்து, அச்சு இன்மை - அச்சந்தராத செய்திகளை, கேட்டல் - கேட்பது, இனிது - இனிதாம்; தடமென் பணை தோள் - பெரியதும் மென்மையுமாகிய மூங்கில்போன்ற தோள்களையும், தளிர் இயலாரை-மாந்தளிரையொத்த நிறத்தையுமுடைய மகளிரை, விடம் என்று - நஞ்சு என்று, உணர்தல் - நினைத்தல், இனிது - இனிதாகும்.

**க-ரை:** இளமையோன் (அறம்ஆற்றலில்) மூப்பென்று உணர்தலும், சுற்றத்திடம் நல்லன கேட்டலும், மங்கையரை விடம்போல் நினைத்தலும் இன்பமாகும்.

அறம் செய்தலுக்கு இளமைப் பருவம் தகாது என்று நினையாது, அதனை முதுமைப் பருவமாகக் கருதி ஆற்று என்பதை, 'இளமையை மூப்பென்று உணர்தல்' என்றார். இதனை நாலடியாரும், 'யாம் இளையமென்னாது கைத்துண் டாம் போழ்தே கரவாது அறம் செய்மின்'- (19) என்றார். 'தடமென் - உணர்தல்' என்பது பிற்கால வழக்கு.

## இளம் வீரர்

இளம் வீரர் நிறைந்தபடை, துணைவலியுடையான் பகை, ஆ இருப்போன் ஆற்றும் விருந்து, இவை இன்பந் தருவன.

*சிற்றாள் உடையான் படைக்கல மாண்(பு)இனிதே!*
*நட்டார் உடையான் பகைஆண்மை முன்இனிதே;*
*எத்துணையும் ஆற்ற இனி(து)என்ப பால்படும்*
*கற்றா உடையான் விருந்து.* 38

**ப-ரை:** சிற்ருள் உடையான் - இளம் வீரர்களையுடையான், படைக்கலம் - ஆயுதம், மாண்பு - மாட்சிமைப்படல், இனிது - இனிதாம்; நட்டார் உடையான் - துணைவலியுடையவனது, பகை ஆண்மை - வீரத் தன்மையை அறிதல், முன் இனிது - மிகவும் இனிதாம்; பால்படும் - பால்தரும், கன்று ஆ உடையான் - கன்ருேடு பசுவை உடையானது, விருந்து - (அளிக்கும்) விருந்திற்கு, எ துணையும் - எல்லா வகையானும், ஆற்ற இனிது - மிகவும் இனிதாகும்.

**க-ரை:** இளம் வீரர் நிறைந்த சேனையும், துணைவலியுடையான் ஆற்றல் அறிதலும், ஆ முதலியன உள்ளோன் ஆற்றும் விருந்தும் இனிமை தருவனவாம்.

சிற்ருள் - இளமையோர்; ஈண்டு வீரரை உணர்த்திற்று. 'துணை வலியும் தூக்கிச் செயல்'- (குறள்-471) எனுங் கருத்தையே, 'நட்டார் உடையான்' என்ருர். இனி நட்டார் என் பதை, சுற்றமுடையான் எனவும் கூறுவர். விருந்தில் சிறப்புடையது நெய்யும் மோரும் உள்ளனவாகும். அவைக்குரிய ஆவும் கன்றும் உடையோன் விருந்தாற்ற வருந்த வேண்டுவதில்லை எனுங் கருத்தையே, 'எத்துணை........ உடையான்' என்ருர். பகைஆண்மை - பகைப்புலத்துக் காட்டும் ஆண்மைத் தன்மையினுல் வீரத்தை விளக்கியது.

**தனித்து வாழல்**

கோபமில்லாப் பிச்சைக்காரன், துன்பமின்றி தனித்து வாழல், பேராசை கொள்ளாமை, இவை இன்பந் தருவன.

***பிச்சைபுக்(கு) உண்பான் பிளிற்ருமை [1] முன் இனிதே;***
***துச்சில் இருந்து துயர்கூரா மாண்(பு)இனிதே;***
***உற்ற பொலிசை [2] கருதி அறன்ஒரூஉம்***
***ஒற்கம் இலாமை இனிது.*** **39**

**ப-ரை:** பிச்சைபுக்கு - பிச்சை எடுத்து, உண்பான் - உண்பவன், பிளிருமை - கோபியாதிருத்தல், இனிது - இனிதாம்; துச்சில் இருந்து - ஒதுக்குக்குடியிருந்து, துயர் கூரா - துன்பம் அடையாத, மாண்பு - மாட்சிமை, இனிது - இனிதாம்; உற்ற பொலிசை கருதி - மிக்க ஊதியம் கருதி, அறன் ஒரூஉம் - அறவழியினின்று நீங்கும், ஒற்கம் - மனத்தளர்ச்சி, இலாமை - இல்லாதிருத்தல், இனிது - இனிதாகும்.

---

பிற பாடம்: 1. பிளிருமை 2. உற்றபேராசை.

**க-ரை:** பிச்சை எடுப்போன் கோபங்கொள்ளாமையும், ஒதுக்கிடமிருந்து உறுதுயர் கொள்ளாமையும், பேராசைக்காக அறவழி நீங்கா ஆண்மையும் இன்பமாம்.

பிளிறல்-கோபித்தல், துச்சில்-ஒதுக்கிடம், ஒரூஉம் - சொல்லிசையளபெடை. 'பேராசை பெருநட்டம் தரும்' ஆதலின் அதனைநீங்கி வாழ்தலை, 'பேராசை... இலாமை' என்று வலியுறுத்தினர்.

**விதையை உண்ணாச் சிறப்பு**

கட்டுப்பாட்டுக்கு அடங்கல், விதையை உணவாக்கா செயல், கசடறக் கற்றல், இவை இன்பந் தருவன.

***பத்துக் கொடுத்தும் பதியிருந்து வாழ்(வு)இனிதே;***
***வித்துக்குற்(று) உண்ணா விழுப்பம் மிகஇனிதே;***
***பற்பல நாளும் பழு(து)இன்றிப் பாங்குடைய***
***கற்றலின் காழ்இனிய(து) இல்.*** 40

**ப-ரை:** பத்து கொடுத்தும் - பத்துப் பணம் கொடுத்தாயினும், பதி இருந்து - உள்ளூரில் இருந்து, வாழ்வு – வாழ்தல், இனிது - இனிதாம்; வித்து - விதைக்கென வைத்த பொருளை, குற்று உண்ணா - குற்றி உண்ணாத, விழுப்பம் - பெருமை, மிக இனிது - மிகவும் இனிதாம்; பற்பல நாளும் – தினந்தோறும், பழுது இன்றி - குற்றமில்லாமல், பாங்கு உடைய - நன்மைதரும் (நூற்களை), கற்றலின் - கற்றலைப்போல, காழ் இனியது - மிக மிக இனியது, இல் - (வேறொன்றும்) இல்லையாம்.

**க-ரை:** தண்டம் கொடுத்தேனும் கட்டுப்பட்டு உள்ளூரில் வாழ்தலும், விதைப் பொருளை செலவு செய்யாமையும், குற்றமின்றிக் கற்றலும் இன்பமாகும்.

பத்துக் கொடுத்தல் - பத்துப்பணம் தண்டம் விதித்தல் முற்கால வழக்கில் ஒன்று. அதைக் கொடுத்தேனும் ஊரின் கட்டுப்பாட்டுக்கு அடங்கி வாழல் சிறந்தது என்பதை, 'பத்துக்கொடுத்தும் பதியிருந்து வாழ்வு' என்றார். 'ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவற்கு - எழுமையும் ஏமாப் புடைத்து'- (குறள் - 398) என்பதை 'கற்றலின் காழ் இனிது' என்பதால் விளக்கினர். காழ் - இறப்பமிக; மிகமிக; இப்பொருளாதலை 'ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க், கென்பொருள் ஏனை இரண்டு மொருங்கு' (குறள் - 760) ஆல் அறிக.